*Ceylon repatriates*

* 14 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have sent any proposal to the Centre during 1958 regarding the rehabilitation of Ceylon repatriates?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

* 15 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons repatriated to this State from Ceylon in 1958 so far; and

(*b*) the number rehabilitated so far?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) During the period 1st January to 7th December 1958, 8,842 persons have been repatriated from Ceylon to this State.

(*b*) There is no information.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, இலங்கையிலிருந்து வெளியேற்றப்படுகிற தமிழர்களுக்கு அகதிகளுக்குத் தரப்படுகிற சலுகை போலவே எல்லாச் சலுகைகளும் தரப்படவேண்டுமென்று மத்திய அரசாங்கத்தினிடத்தில் வற்புறுத்த வேண்டும் என்று சொல்லப்பட்டபோது கனம் அமைச்சர் அவர்கள் அகதிகள் பிரச்சனை வேறு, இந்தத் தமிழர்களுடைய பிரச்சனை வேறு என்று சொன்னார்கள். ஆனால் நாடு அற்றவர்கள் என்று வெளியேற்றப்படுகிறவர்கள் எல்லோரும் தமிழர்கள். இங்கே அகதிகளாகவே வருகிறார்கள். ஆகவே அகதிகள் பிரச்சனையைப் போலக் கருதி அகதிகளுக்கு அளிக்கும் எல்லாச் சலுகைகளையும் இவர்களுக்கு அளிக்கவேண்டும் என மத்திய அரசாங்கத்தினிடம் வற்புறுத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அகதிகள் வேறு, இவர்கள் பிரச்சனை வேறு என்று மீண்டும் சொல்லுகிறேன். நாடு அற்றவர்கள் பிரச்சனை வேறு. இங்கே வந்து கொண்டிருக்கிறவர்களுடைய பிரச்சனை வேறு. இதைப்பற்றி தனியாக பரிசிலனை செய்யப்பட்டது. அதற்கென்றே ஏற்படுத்தப்பட்டவர்கள் சில சிபார்சுகள் செய்திருக்கிறார்கள். அந்த சிபார்சுகளைத் தனித்தனியாக அரசாங்கம் கவனித்து வேண்டிய நடவடிக்கை எடுத்து வருகிறார்கள். குறிப்பாக ஒரு சிபார்சு அவர்களுக்கென்றே தொழில் அமைப்பது. முக்கியமாக நூற்பு ஆலை அமைப்பது. அதற்காக மத்திய அரசாங்கம் உதவி அளிக்கிறது.

SRI V. ARUNACHALA THEVAR : இலங்கை தேயிலைத் தோட்டங்களில் இதற்கு முன்னால் 25 சத விதம் சிங்களவர்களையே நியமிக்க வேண்டும் என்று முடிவு செய்திருந்தார்கள். இப்போது 50 சத வீதம் சிங்களவர்களை நியமிக்க வேண்டும் என்று ஏற்படுத்தியிருப்பதனால் அதிகமான இந்திய-இலங்கை தமிழர்களுக்கு வேலை கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. இப்படிச் செய்வது இலங்கையிலிருந்து தமிழர்களை வெளியேற்றுவதற்கான இலங்கை அரசாங்கத்தின் சூழ்ச்சி என்பதையும் தமிழர்களுக்குச் செய்யக்கூடிய அநீதி என்பதையும் உணர்ந்து இதை வற்புறுத்திக் கண்டிக்க வேண்டும் என நமது அரசாங்கத்தார் மத்திய அரசாங்கத்தினிடம் சிபார்சு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது வேறு பிரச்சனை. அந்த நாட்டில் உள்ளவர்களுக்கு வேலை கொடுக்கிறோம் என்று சொன்னால் அதை நாம் ஆட்சேபிப்பதும் முறை என்று தோன்றவில்லை. இருந்தாலும் இந்த மாதிரியான விஷயங்களை மத்திய அரசாங்கமும் கவனித்து வருகிறது.